4 கோடி ரூபாய் மானியம் வழங்குவதற்கென ஒதுக்கப்பட்டிருக்கிறது. மூலதனச் செலவுகள் நடைமுறை பட்ஜெட்டில் மூலதனச் செலவுகளுக்காக ரூ.77½ கோடியும், ராஜ்ய சர்க்கார்களுக்கான கடன் கொடுப்பதற்காக ரூ.63 கோடியும், ஒதுக்கப்பட்டிருக்கிறது. திருத்தப்பட்ட மதிப்பீட்டின்படி மூலதனச் செலவுகளுக்காக 75 கோடி ரூபாயும் ராஜ்ய சர்க்கார்களுக்குக் கடன் கொடுப்பதற்காக 79 கோடி ரூபாயும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இந்த 79½ கோடி ரூபாயில் 15 கோடி ரூபாய் தேசிய அபிவிருத்தி நிதி ஒன்றிலிருந்து தரப்படும்; அந்த தேசிய நிதிக்கு அமெரிக்க கடனுதவித் திட்ட கோதுமை விற்பனை செய்வதன் மூலம் கிடைத்த தொகையிலிருந்து 71 கோடி ரூபாய் ஒதுக்கித் தரப்படும். மூலதனச் செலவுகள் பட்ஜெட்டில் காட்டப்பட்டுள்ள அதே அளவுக்கு சரியாக பார்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகையில் மேலும் 7 கோடி ரூபாய் அதிகரிப்பு செய்வது சாத்தியமாகி இருக்கிறது; பாதுகாப்பு நிலைமைகளின் காரணமாக எழுகிற அத்தியாவசிய வேலைத் திட்டங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள தொகையையும் அதிகரிப்பது சாத்தியமாகி இருக்கிறது. அடுத்த வருஷத்துக்கு மூலதனச் செலவுக்காக 69 கோடி ரூபாயும் ராஜ்ய சர்க்கார்களுக்கான கடன் கொடுக்க ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையில் 25 கோடி ரூபாய் தேசிய அபிவிருத்தி நிதியிலிருந்து தரப்படும். இத்தொகைகளில், ரயில்வேக்களுக்காக 15.36 கோடி ரூபாயும் தபால்-தந்தி இலாகாக்களுக்கு 4.85 கோடி ரூபாயும் தொழில் துறை அபிவிருத்திக்காக 9.85 கோடி ரூபாயும் நதி பள்ளத்தாக்குத் திட்டங்களுக்கு 40 கோடி ரூபாயும் ரஸ்தாக்கள்- கட்டிடங்கள் வகைக்காக 16.79 கோடி ரூபாயும் பாதுகாப்பு நிலைகளுக்காக 17 கோடி ரூபாயும் அடங்கி இருக்கின்றன. அபிவிருத்தி வகைக்கும் மூலதனச் செலவுக்குமாக ஒதுக்கப்பட்டுள்ள தொகைகள், திட்டக் கமிஷன் அதன் அறிக்கையின் இரண்டாவது பாகத்தில் தெரிவித்துள்ள யோசனைத் திட்டங்களை அநுசரித்த ரீதியிலேயே இருக்கின்றன. அந்தத் திட்டப்படி 1956ம் மார்ச்சுடன் முடிவடைகிற ஐந்து வருட காலத்தில் சர்க்கார் மேற்கொள்ளும் வேலைகளுக்காக மொத்தம் 1493 கோடி ரூபாய் செலவிடப்பட வேண்டும். வெளிநாட்டு உதவி கிடைக்குமானால் இத் தொகையை மேலும் 301 கோடி ரூபாய் அதிகமாக்கிக் கொள்ளலாம். தேசத்தில் ஏற்கனவே ஏற்பட்டுள்ள அபிவிருத்தியை கவனத்தில் வைத்துக் கொண்டு சர்க்கார் தரப்பிலும் தனிப்பட்டவர்கள் தரப்பிலும் மேற்கொள்ளப்படக் கூடிய வேலைகளை அடிப்படையாக வைத்தும் இப்படி நன்றாக ஆய்ந்து வகுக்கப்பட்டுள்ள நல்ல நிறைந்த அபிவிருத்தித் திட்டம் ஒன்று இப்போது தேசத்துக்கு கிடைத்திருக்கிறது. அமெரிக்கத் தொழில் நுட்ப ஒத்துழைப்புத் திட்டப்படியாகவும் தொழில் நுட்ப ஒத்துழைப்பு நிதி ஒன்றை ஏற்படுத்துவதற்கும் பணம் தருவதற்காக அமெரிக்க சர்க்கார் 5 கோடி டாலர் வழங்குவதற்குத் தாராள மனதுடன் முன்வந்துள்ளனர். இத்தொழில் நுட்ப ஒத்துழைப்பு நிதியானது விவசாயத் துறையில் திறமையை அதிகப்படுத்துவதற்கான திட்டங்களுக்கும் உணவு உற்பத்தியைப் பெருக்கும் திட்டங்களுக்கும் பயன்படுத்தப்படும். இந்த நிதிக்கு சர்க்கார் தரும் தொகையையும் சேர்த்தால் இது 50 கோடி ரூபாயாகப் பெருகிவிடக் கூடும். புதிய நதிப்பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டங்கள் அல்லது பெரும் நீர்ப்பாசன திட்டங்கள் அமையும் பகுதிகளின் சமுதாய அபிவிருத்தித் திட்டம் ஒன்றை நடத்தி வைப்பதற்கும் இந்த நிதி தொகையைப் பயன்படுத்தலாம். <u>வழிவகைகள்</u> மூலதன மார்க்கெட்டில் நிலைமை சாதகமாக இல்லாதபடியால், பட்ஜெட்டில் மதிப்பிட்டிருந்தபடி 100 கோடி ரூபாயைப் பொது மார்க்கெட்டில் திரட்ட முடியவில்லை. 50 கோடி ரூபாய் தான் திரட்ட முடிந்தது. அடுத்த வருஷத்துக்கு புதிய கடன்கள் மூலம் திரட்டப்படக் கூடிய தொகையாக 35 கோடி ரூபாய் காட்டப்பட்டிருக்கிறது. அப்படி ஏற்பாடு செய்யும் போது, தற்போது மார்க்கெட் நிலவரம் எவ்வாறு இருக்கிறது என்பதும் கவனத்தில் வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ் வருஷத்தில் சிறிய சேமிப்புத் திட்டங்கள் மூலம் கிடைக்கக் கூடிய நிகர தொகை 40 கோடி ரூபாயாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. பட்ஜெட்டில் இது 43 கோடி ரூபாயாகக் காட்டப்பட்டிருக்கிறது. இக்குறைவு தபால் சேமிப்பு பேங்கு கணக்கில் தான் பிரதானமாகக் கண்டிருக்கிறது. இக்குறைவு தபால் சேமிப்பு பேங்கு கணக்கில் தான் பிரதானமாகக் கண்டிருக்கிறது. தேசிய சேமிப்புப் பத்திரங்கள், புதுவகை சேமிப்பு டெபாசிட்டுகள் ஆகிய இனங்களில் அபிவிருத்தி காணுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. அடுத்த வருஷத்துக்கு, சிறிய சேமிப்புத் திட்டங்கள் மூலம் கிடைக்கும் நிகரத் தொகை 44 கோடி ரூபாயாகக் காட்டப்பட்டிருக்கிறது. <u>முடிவு:</u> சமீப வருஷத்களின் பணவீக்க நிலைமை மாறுதல் இருக்கும் சூழ்நிலைப் போக்கில், மேலும் அதிகப் பணவீக்கத்தை உண்டு பண்ணுவதைத் தடுப்பதற்காக சர்க்கார் தரப்புச் செலவைக் கட்டுப்படுத்தும் அவசியத்துக்கும், தேசிய அபிவிருத்திக்காக அதிகப்படியான பணம் செலவிடும் அவசியத்துக்கும் இடையே ஒரு சமநிலையை நிர்ணயித்துக் கொள்ள வேண்டியிருந்தது. பரிசீலிக்கப் பட்டிருக்கும் ஒவ்வொரு வருஷத்திலும் மூலதன பட்ஜெட்டுக்கு அநுகூலமான வகையில் ரெவின்யூ பட்ஜெட்டில் உபரித் தொகைகள் ஏராளமாக இருந்துக் கொண்டே வந்தன. 1951-52 வருஷ மிச்சத் தொகை அசாதாரணமாக அதிகரித்திருக்கிறது. ஆனால் அதற்கு அடுத்த வருஷ மிச்சத் தொகையையும் கணிசமான அளவு இருக்கத்தான் செய்கிறது. நடைமுறை வருஷ பட்ஜெட்டில் மொத்தம் 32 கோடி ரூபாய் துண்டு விழும் என்று காட்டப்பட்டிருந்தது. ஆனால் திருத்தப்பட்ட மதிப்பீட்டின்படி துண்டு விழும் தொகை 4 கோடி ரூபாய்தான் இருக்கிறது. கடன் வாங்கும் தொகையில் 50 கோடி ரூபாய் குறைந்து விட்டிருந்தும் கூட, இந்த அபிவிருத்தி கண்டிருப்பதோடு ரெவின்யூ வருமானம் மதிப்பீட்டுக்கு மேல் அதிகரித்து விட்டது அவ்வளவாகக் காரணம் இல்லை; அமெரிக்க கடன் கோதுமையை விற்பனை செய்ததன் மூலம் பணம் கிடைத்தது, வரவுகள் சிலவுமாகும் பொதுவ் காரணமாகும். சென்ற வருஷங்களில் போலவே இன்றியமையாததும் தடுக்க முடியாததுமான செலவுகளுக்கு மட்டுமே தொகை ஒதுக்கப்பட்டிருக்கும். அடுத்த வருஷ பட்ஜெட்டில் மொத்தம் 56 கோடி ரூபாய் துண்டு விழுமென்று காட்டப்பட்டிருக்கிறது; இது அந்த வருஷத்தின் முதலீட்டுத் தொகை அளவுக்கு குறைவாக உள்ளபடியே இருக்கக் கூடும். பட்ஜெட்டில் இத் தொகை துண்டு விழுவதனால், பணவீக்க நிலவரத்தை அது பெருமளவாக பாதித்து விடாது. (தினமணி 2.3.52)